Registered No. M. 2330

"SIDDHANTHAM"
Vol. 35—No. 6



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 35 | சுபகிருது ஆனி 1962 ஜூன் | இதழ் 6

உள்ளுறை — பக்கம்

தமிழ்ச் சமர்த்தர் ... 145
திருக்குறளும் சமயமும் ... 156
வழிபாடு ... 161
சித்தர் கண்ட சித்தாந்தம் ... 166

பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம். ஏ., எம். ஓ. எல்.
உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்
12, கிழக்கு மாடவீதி, மயிலாப்பூர், சென்னை-4.

ஆண்டு சந்தா ரூபா 3 — தனிப்பிரதி அணு 4

## சமாஜ நிகழ்ச்சிகள்

திருஞானசம்பந்தர் திருநட்சத்திர விழா; 22—5—62 மாலை திருமயிலை கபாலீசுவரர் கோயிலில் சமாஜ ஆதரவில் திருஞானசம்பந்தர் திருநட்சத்திர விழா கொண்டாடப் பெற்றது. திரு அ. சோமசுந்தரம் செட்டியார் M. A. அவர்கள் தலைமையில் திருவாளர்கள் P. ஆலாலசுந்தரம் செட்டியார் M. A., G. கலியாணம் M. A., இவர்கள் முறையே "திருஞானசம்பந்தர்", திருநீலகண்ட யாழ்ப்பாணர்" என்னும் பொருள்கள் பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள். திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை B. A. L. T., அவர்களும் பேசினார்கள்.

செயற்குழுக்கூட்டம்; சமாஜச் செயற்குழுக் கூட்டம் 1—7—62 ஞாயிறு காலை 9—30 மணிக்குச் சமாஜ அலுவலகத்தில் கூடும்' செயற்குழு உறுப்பினர்கள் இதையே அழைப்பாக ஏற்றுக்கொண்டு வருகைபுரியுமாறு கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

—ஜி, கலியாணம்.
சமாஜச் செயலன்.

சைவ சித்தாந்த சாத்திர வகுப்பு; சென்னையில் திரு. ஜி.எம். முத்துசாமி பிள்ளை I. A. S. (Retd) அவர்கள் தலைமையில் அமைந்துள்ள சித்தாந்த சாத்திர வகுப்புக்குழுவின் சார்பில், இராயப்பேட்டைத் திரு. வி. க. மணி மண்டபத்தில், மே மாதம் 18, 19, 20, தேதிகளில் "உண்மை விளக்கம்" வகுப்பு திரு. புலவர் ந. ரா. முருகவேள் M. A., M. O. L. அவர்களால் நடத்தப் பெற்றது. திருவாளர்கள்: அறநிலைய ஆணையர் M. S. சாரங்கபாணி முதலியார் B. A. B. L., T. H. விவேகானந்தம் பிள்ளை B. A. L. T., இராவ் சாகிப் நல். முருகேச முதலியார் B. A., சைவப் பெரியார் ச. சச்சிதானந்தம் பிள்ளை B. A. L. T., முதலிய பெருமக்கள் பலர் மூன்று நாட்களிலும் வந்திருந்து சிறப்பித்தார்கள். செயலாளர் திரு. கு. அய்யா சுப்பிரமணிய முதலியார் J. P. அவர்கள் நன்றியுரை நவில, வாழ்த்துரையுடன் வகுப்பு இனிது நிறைவேறியது.

Reg. M. 2330 உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு.

மலர் 35 | சுபகிருது ஆனி 1962 ஜூன் | இதழ் 6

## தமிழ்ச் சமர்த்தர்

ந. ரா. முருகவேள்

(முற்றொடர்ச்சி : மலர் 35, இதழ் 5, பக்கம் 120)

**தவயோக நெறி :**

இங்ஙனம் மங்கையரோடு மணந்திருந்தே யோகநெறி நிற்கும் மாண்புடையவராக விளங்கியருளிய சுந்தரரை

"இளையான் அடக்கம் அடக்கம் கிளைபொருள்
இல்லான் கொடையே கொடைப்பயன் - எல்லாம்
ஒறுக்கும் மதுகை உரனுடை யாளன்
பொறுக்கும் பொறையே பொறை"

என்பது பற்றிச் சான்றோர்கள் அனைவரும் மிகவியந்து புகழ்ந்து போற்றி மகிழ்ந்துள்ளனர்.

"செல்வநல் ஒற்றி யூரன்
செய்யசங் கிலியால் ஆர்த்து
மல்லலம் பரவை தன்கண்
மாழ்குற அமிழ்த்து மேனும்
அல்லும்நன் பகலும் நீங்காது
அவன்அடி மகிழில் எய்தி
நல்லஇன் படைந்தி ருப்பன்
நம்பியா ரூரன் தானே"

"பெருமிழலைக் குறும்பர்எனும் பரம யோகி
பெரிதுவந்துன் திருவடித்தா மரையைப் போற்றி
விரைமலர்தூய் வந்தனைசெய் கின்றான் என்றால்,
விளங்கிழையார் இருவரொடும் முயங்க லாமோ?
உரைமதி! நின் றனைவெறுப்ப தென்கொல்? நின்னை
உடையானுக் கடுத்தசெயல் உனக்கும் ஆயிற்
சுரர்முனிவர் பரவவுறும் பெருஞ்சீர்த் தொண்டத்
தொகைசெய்தோய்! அறம்முதல்நால் வகைசெய்தோயே"

எனத் துறைமங்கலம் சிவப்பிரகாசர் மிக வியந்து போற்றிப் பாராட்டியிருத்தல், ஈண்டு அறிந்து இன்புறத்தக்கது. சேக்கிழார் பெருந்தகையும் 'மிக்க விழுத்தவ வேந்தர்' எனவும், 'நீந்தாரும் தொடர்வரிய நெறிநின்றார்' எனவும் போற்றிப் புகழ்ந்திருத்தல் காணலாம். சிவஞானியர் இலக்கணம் தெளிவிக்கத் தலைப்படும் அருள் நந்தி சிவம், சுந்தாரின் வாழ்க்கையை நினைவு கூர்ந்து, அதனையே மேல்வரிச் சட்டமாகக் கொண்டு,

"நாடுகளிற் புக்குழன்றும் காடுகளிற் சரித்தும்
நாகமுழை புக்கிருந்தும் தாகமுதல் தவிர்ந்தும்
நீடுபல காலங்கள் நித்தராய் இருந்தும்
நின்மலஞா னத்தையில்லார் நிகழ்ந்திடுவர் பிறப்பின்;
ஏடுதரும் மலர்க்குழலார் முலைத்தலைக்கே இடைக்கே
எறிவிழியின் படுகடைக்கே கிடந்தும், இறைஞானம்
கூடுமவர் கூடரிய வீடும் கூடிக்
குஞ்சித்த சேவடியும் கும்பிட்டே இருப்பர்"

"அங்கித்தம் பனைவல்லார்க்கு அனல்சுடா தாகும்
அவுடதமந் திரம்உடையார்க்கு அருவிடங்கள் ஏறா
எங்கித்தைக் கன்மமெல்லாம் செய்தாலும் ஞானிக்கு
இருவினைகள் சென்றணையா..." (சித்தியார்:308,309)

எனத் தெளிவுறுத்தி யருள்கின்றார். சரியை கிரியை யோக ஞானங்களுள் சுந்தரர் யோக நெறிக்குரியவர் என்பதும், "நாடுவன் நாடுவன் நாபிக்கு மேலேயோர் நால்விரல்" என அவர் அருளிச் செய்திருப்பதும், ஈண்டு நாம் நினைவில் இருத்துதற்குரியன.

**வீடுபெற்ற நிலையின் வியப்பு :**

இனி வேறொரு வகையிலும் ஆராயலாம். அப்பர் சம்பந்தர் மாணிக்க வாசகர் முதலிய அருளாளர்கள் அனை வரும், மண்ணுலகை நீத்து விண்ணுலகெய்தி இறையரு ளொளியிற் கலக்கப் புக்க நிலையில், அவர்களிடம் இருந்து நாம் யாதொரு செய்தியும் பதிகமும் கிடைக்கப் பெற் றிலேம். ஆனால் சுந்தரர் திருவஞ்சைக் களத்தினின்று புறப்பட்டு வெள்ளை யானை ஏறித் திருக்கயிலையை நோக் கிச் செல்லுங்கால் வழியிடையே பாடிக்கொண்டு சென்ற "தான் எனை முன்படைத்தான்" என்னும் திருப்பதிகம், "ஆழிகடல் அரையா அஞ்சையப்பர்க்கு அறிவிப்பதே" என அவராற் பணிக்கப்பெற்றபடி, வருணதேவனால் திரு வஞ்சைக் களத்தில் உய்க்கப்பட்டு, நம்மனோர் அனைவ ராலும் உணரப் பெற்றது. அத்திருப்பதிகத்தின்கண் சுந்தரர் இறைவன் தம்மை வெள்ளை யானையை அனுப்பி வைத்துத் திருக்கயிலைக்கு வரவழைத்துக் கொண்டதும், இந்திரன் மால் பிரமன் முதலிய தேவர்களெல்லாம் வந்து தம்மை எதிர்கொண்டு வரவேற்றதும், ஆகிய செய்திகளைத் தெரிவித் தருளி யிருக்கின்றார்.

"மண்ணுலகிற் பிறந்து நும்மை வாழ்த்தும் வழியடியார்
பொன்னுலகம் பெறுதல் தொண்டனேன் இன்று
கண்டொழிந்தேன்
விண்ணுல கத்தவர்கள் விரும்பவெள்ளை யானையின்மேல்
என்னுடல் காட்டுவித்தான் நொடித்தான்மலை யுத்தமனே"

"இந்திரன் மால்பிரமன் எழிலார்மிகு தேவரெல்லாம்
வந்தெதிர் கொள்ளஎன்னை மத்தயானை அருள்புரிந்து
மந்திரமா முனிவர் இவன்ஆர்என எம்பெருமான்
நந்தமர் ஊரன்என்றான் நொடித்தான்மலை யுத்தமனே"

இத்தகைய அரிய பல நலங்கள் அமைந்த திருப்பதிகம் ஆதல் பற்றியே, தாயுமானவர் 'தான்எனை முன்படைத் தான்' எனத் தொடங்கும் திருப்பதிகத்தில் மிக்க ஈடுபாடு கொண்டு விளங்கினார் !

"தான்என்னை முன்படைத்தான் என்ற தகவுரையை
நான்என்று உண்மைபெற்று நாம்உணர்வ தென்நாளோ"

என அவர் அருளிச் செய்திருத்தல் காண்க! வீடுபேறு எய்துவோர் அனைவரும் உடம்பு நீங்கிய பின்னரே அதனை எய்தப் பெறுவர். வீடுபேறு தலைக்கூடுதல் உடம்பு நீங்கிய தற்குப் பின்னரே இயலும். இது குறித்தே 'செடியார் உடலைச் சிதையாதது எத்துக்கு எங்கள் சிவலோகா?' எனவும், 'தினைத்துணையேனும் பொறேன் துயர் ஆக்கை யின்திண்வலையே' எனவும் 'மண்மேல் யாக்கை விடுமாறும் வந்துன் கழற்கே புகுமாறும்' எனவும் மாணிக்கவாசகர் ஆங்காங்கே அருளிச் செய்வாராயினர். இங்ஙனமாகவும், சுந்தரரோ களையா உடலோடு – மானவ யாக்கையோடு –திருக்கயிலை செல்லப்பெற்றார். தாம் சென்றது மட்டுமே யன்றித் தமது அருமை நண்பர் ஆகிய சேரமான் பெரு மானையும் மனித யாக்கையுடனேயே தம்மோடு திருக் கயிலைக்கு அழைத்துச் சென்றார். சுந்தரர் எய்திய இவ் வீடு பேற்று நிலையின் இயல்பினை வியந்து,

"களையா உடலோடு சேரமான் ஆரூரன்
விளையா மதம்மாறா வெள்ளானை மேற்கொள்ள
முளையா மதிசூடி மூவா யிரவரொடும்
அளையா விளையாடும் அம்பலம்நின் ஆடரங்கே"

எனத் திருவிசைப்பா ஆசிரியர் பூந்துருத்தி நம்பிகாட நம்பி களும்,

"ஞானஆ ரூரரைச் சேரரை அல்லது நாம் அறியோம்
மானவ யாக்கை யொடும்புக் கவரை; வளர்ஒளிப்பூண்
வானவ ராலும் மருவற் கரிய வடகயிலைக்
கோனவன் கோயிற் பெருந்தவத் தோர்தங்கள்
கூட்டத்திலே"

என நம்பியாண்டார் நம்பிகளும் புகழ்ந்து போற்றி யிருத் தல் காணலாம். இவ்வாற்றானும் சுந்தரர் ஒரு பெருந் 'தமிழ்ச் சமர்த்தர்' என்பது பெறப்படுகின்றதன்றோ?

**வினாவும் விடையும்:**

சற்று முன்னர் நிகழ்ந்த 'ஐயந்தெளிதல்' (Seminar) நிகழ்ச்சியில், 'மண்ணில் நல்லவண்ணம் வாழலாம்' என ஞானசம்பந்தர் பாடியிருக்க, 'வாழ்வாவது மாயம் இது

மன்னுவது நின்னாம்' எனச் சுந்தரர் பாடியிருப்பது முரண்பாடு அல்லவா? என நண்பர் ஒருவர் ஐயுற்று வினவி யிருந்தார். அஃது ஈண்டைக்கு ஒருவகையில் இயைபுடையதாக இருத்தலின், அதற்கு ஒரு சிறிது விடையிறுக்க விழைகின்றேன்.

ஞானசம்பந்தரின் கூற்றைத் தெருள்நோக்கு(Optimism) என்றும், சுந்தரரின் கூற்றை மருள்நோக்கு (Pessimism) என்றும் கருதிக்கொண்டு, நண்பர் அவர்கள் மயங்குகின்றார் போலும்! இருவர் கூற்றும் தெருள்நோக்கு உடையனவே. அவை தம்முள் முரணுவன அல்ல. ஒன்று மற்றொன்றிற்கு அரண் செய்வதேயாகும். இங்கே மாயம் என்னும் சொல், மித்தை (Illusion, Delusion) என்னும் பொருளில் வழங்கப்படவில்லை; அசத்து (Evanescence) என்னும் பொருளினையே (உள்ளது போலத் தோன்றி இல்லையாகிவிடும் நிலையாமைத் தன்மையினையே) அது குறிக்கின்றது.

“ மண்தனில் வாழ்வும் வானத்
தரசுஅயன் மாலார் வாழ்வும்
எண்தரு பூத பேத
யோனிகள் யாவும் எல்லாம்
கண்டஇந் திரமா சாலம்
கனுக்கழு திரதம் காட்டி
உண்டுபோல் இன்றும் பண்பின்
உலகினை அசத்தும் என்பர் ”

எனவரும் சிவஞான சித்தியார் செய்யுளும், அதற்கு

“ இந்திர சாலம் (Magic) தோன்றும்பொழுதே இல்லையாய்மறைவனவற்றிற்கும், கனுக்காட்சி(Dreams) கடைபோதல் இன்றி இடையே அழிவனவற்றிற்கும், கழுதிரதம் (Mirage) ஒரு காரணம் காட்டி அழிவெய்துவனவற்றிற்கும் உவமையாயின ”

எனச் சிவஞான சுவாமிகள் வகுத்த உரைவிளக்கமும் ஈண்டு உளங்கொளத் தக்கன. இங்ஙனமே,

" நீரில் எழுத்தும் நிகழ்கனவும் பேய்த்தேரும்
ஓரின்அவை இன்றுமாறு ஒப்பு "

என ஆசிரியர் மெய்கண்டசிவம் அருளிச் செய்திருத்தலும் அறியத்தக்கது. 'மாயம்' அல்லது 'அசத்து' என்னும் சொற்களுக்குப் பொருள், மிகவிரைவில் அழிந்துவிடும் இயல்பிற்றாய் நிலையில்லாதது என்பதேயாகும்.

'பெண்ணின் நல்லாளொடும் பெருந்தகை இருந்தது அதனால் நாம் மண்ணில் நல்லவண்ணம் வாழலாம்' என நவின்று, ஞானசம்பந்தர் மக்களுக்கு வாழ்க்கையில் நம்பிக்கையும் பற்றும் உண்டாகச் செய்கின்றார்! வாழ்க்கையின் சிறந்த பயனை மக்கள் பெறவேண்டுமே என்னும் பேரிரக்கத்தால், சுந்தரர் 'வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்' என அறிவுறுத்துகின்றார். இவ்வறிவுரை உலகியல் நெறிக்குப் புறம்பான (Un-wordly and other-wordly) போலியுரையன்று; வாழ்க்கைக்குச் சுறு சுறுப்பும் விறுவிறுப்பும் ஊட்டும் தூய நல்ல சிறந்த உண்மையுரையேயாம். 'தாழாது அறஞ்செய்மின்' எனவும் 'தாழாது திருக்கேதாரம் எனிர்' எனவும் பணித்தற் பொருட்டே, சுந்தரர் 'வாழ்வாவது மாயம்'எனக் குறிப்பிடுகின்றார். 'தாழாது' (வீணே காலம் கழியாமல்) என்ற உயிர்ப்பான சொல்லின் அமைப்பை இப்பாட்டில் நாம் அழுந்தி அறிதல் வேண்டும்.

வாழ்க்கையின் நிலையாமையை உணர்ந்துகொள்பாயவர்க்கே அதன் இன்பத்தையும் பயனையும் வல்லாங்குத்தக்கவாறு எய்துதல் இயலும்! அது பற்றியே காஞ்சித்திணை என ஒன்றைத் தொல்காப்பியர் வகுத்தருளினர். மதுரைக் காஞ்சி என்னும் சிறந்த செந்தமிழ்ச் சங்கநூல் தோன்றியதும் இக் குறிக்கோள் பற்றியேயாகும் கோவலனும் கண்ணகியும் மணந்து இன்பம் நுகர்ந்த திறனைச் சிலப்பதிகாரம் வாயிலாக இளங்கோவடிகள்,

" தூமப் பணிகள்ஒன் றித்தோய்ந்தால் எனஒருவார்
காமர் மனைவியெனக் கைகலந்து-நாமம்
தொலையாத இன்பமெல்லாம் துன்னினர் மன்மேல்
நிலையாமை கண்டவர்போல் நின்று " -

எனக் கூறியிருக்கும் திறமும், இவ்வுண்மையைச் செவ்விதின் வலியுறுத்தும். சுந்தரர் 'முடியால் உலகாண்ட மூவேந்தரும்' மதிப்ப, இன்பத்தோடு இசைந்த பெருமித வாழ்வு நடாத்தும் பெற்றியினராக விளங்கியிருந்தும், அம் மகிழ்ச்சியிலேயே மைந்துற்று மயங்கிவிடாமல்,

> " இகழ்ச்சியிற் கெட்டாரை உள்ளுக ! தாம்தம்
> மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து "

என்றபடி வாழ்க்கையின் பிறிதொரு புறத்தையும் (Seamy side of life) தாம் கருதி உணர்ந்து,

> " சொல்லிடில் எல்லையில்லை சுவையிலாப் பேதை வாழ்வு'
> 'மானுட வாழ்க்கை ஒன்றாகக் கருதிடிற்
> கண்கள்நீர்பில்கும்'
> 'கடையெலாம் பிணைத்தேரை வால்'
> 'செத்த போதில் ஆரும்இல்லை சிந்தையுள் வைம்மின்கள்'

என நம்மனோர்க்கும் உணர்த்தக்கூடியவராகத் திகழ்ந்தருளினர். சுந்தரர் தமிழ்ச்சமர்த்தர் என்பதனை இவ்வாற்றாலும் இனிதுணரலாம்

இனி, விறன்மிண்டர் ஏயர்கோன்கலிக்காமர் போன்றோர் தம்பாற் பகைமை பாராட்டினராகவும், அவர்களையும் தம் கெழுதகைமை நண்பர்களாகச் செய்துகொண்டொழுகிய அரும்பெருந் திறமும், சுந்தரரின் தமிழ்ச் சமர்த்தினை விளக்கும் உறுபெருஞ் சான்றாக அமையும்.

> " பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
> தகைமைக்கண் தங்கிற் றுலகு "

நயத்திற்குச் சுந்தரனார் :

சுந்தரரைச் 'சமர்த்தர்' என்று மட்டும் கூறியமையாது 'தமிழ்ச் சமர்த்தர்' என்று விதந்து கூறியது, தமிழ் மொழி ஒப்புயர்வற்றதாதல் போல, ஒப்புயர்வற்ற சமர்த்துடையவர் என்று சிறப்பிப்பதற்கு எனக் கொள்ளலாம். சுந்தரர் மட்டுமே சமர்த்தர் அன்றி, அவர்தம் செந்தமிழும் சமர்த்து மிக்கதாகும். 'தமிழ்ச் சமர்த்தர்' என்னும் தொடர் 'தமிழிற் சமர்த்து அமையப் பாடுதலில் வல்லவர்' என

வும் பொருள்படும். இப்பொருட் குறிப்பிலேயே 'நயத்திற்குச் சுந்தரனூர்' என்னும் புகழுரை தமிழகத்தில் வழங்கி வருகின்றது.

" வாக்கிற் கருணகிரி, வாதவூ ரர்கனிவில்
தாக்கில் திருஞான சம்பந்தர்-நோக்கிற்கு
நற்கீர தேவர், நயத்திற்குச் சுந்தரனூர்
சொற்குறுதிக்கு அப்பர்எனச் சொல் "

என்பது மிகச் சிறந்ததொரு பழம்பாடல். பழந்தமிழ்ச் சான்றோர்கள் நிகழ்த்திய இலக்கியத் திறனாய்வின் (Literary Criticism) அரும்பெறல் விளைவே. இவ்வினிய பழம்பாடல் எனலாம். இதன்படி சுந்தரரின் நயமார்ந்த செந்தமிழின் திறனறிய இரண்டொரு சான்றுகளை மட்டிற் கண்டு அமைவோம்.

சுந்தரர் இறைவன்பால் நெல்லிட ஆட்கள் வேண்டிப் பாடுகின்றார். அதனை வாளா பாடாமல், 'இறைவனே! நீ நின் உடலின் பாதியில் ஒரு பெண்ணையும், சடையின் மேல் ஒரு பெண்ணையும் வைத்திருக்கின்றாய். அதனால், என்னைப்போல நீயும் மாதர் நல்லார் விளைக்கும் வருத்தத்தின் இயல்பினை அறிந்திருக்கின்றாய். எனவே பாவை பசி வருத்தமும் வாட்டமும் தீர, யான குண்டையூரிற் பெற்ற சில நெல்லினை அட்டித்தரப் பணித்தல் வேண்டும்' என நயமுறப் பாடுகின்றார்!

" பாதியோர் பெண்ணை வைத்தாய் படருஞ்சடைக்
கங்கை வைத்தாய்
மாதர் நல்லார் வருத்தம் அதுநீயும் அறிதியன்றே
கோதில் பொழில் புடைசூழ் குண்டையூர்ச்
சிலநெல்லுப் பெற்றேன்
ஆதியே அற்புதனே அவை அட்டித் தரப் பணியே "

தம்பக்கல் ஏதேனும் குற்றங்கள் இருப்பின் அவற்றைப் பொறுக்கருளுமாறு இறைவனை வேண்டிக்கொள்ளத் தலைப்படும் சுந்தரர். குற்றம் செய்தார் பலரையும் சுட்டிக் குறிப்பிட்டு, அவர்தம் குற்றங்களையெல்லாம் குணமாகக் கொண்டருளிய நீ, என் குற்றங்களையும்

அங்ஙனமே கொண்டருளல் வேண்டும் என மன்றுடு கின்றார்!

" நற்றமிழ் வல்ல ஞானசம் பந்தன்
நாவினுக் கரையன் நாளைப்போ வானும்
கற்ற சூதன்நற் சாக்கியன் சிலந்தி
கண்ணப்பன் கணம்புல்லன் என்றிவர்கள்
குற்றம் செயினும் குணம்எனக் கருதும்
கொள்கை கண்டுநின் குரைகழல் அடைந்தேன்
பொற்றி ரள்மணிக் கமலங்கள் மலரும்
பொய்கை சூழ்திருப் புன்கூர் உளானே "

தமக்குப் பொருள்கொடுத்தல் வேண்டும் என இறைவனைக் கேட்கும் சுந்தரர், வாளா கேளாது 'திருவீழி மிழலையில் முன்னர் அப்பருக்கும் சம்பந்தருக்கும் நாள் தோறும் படிக் காசு அளித்தீர். அதுபோல எனக்கும் இப்போது அருள்செய்தல் வேண்டும்' என நயஞ்சிறக்கக் கேட்கின்றார்!

" நேசமுடை அடியவர்கள் வருந்தாமை அருந்த
நிறைமறையோர் உறைவிழி மிழலைதனில் நித்தல்
காசுஅருளிச் செய்தீர்! இன்று எனக்கருள வேண்டும்!
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே "

சங்கிலியாரைத் தமக்குத் திருமணம் செய்து வைத்தல் வேண்டும் என இறைவன்பாற் சுந்தரர் வற்புறுத்தி வேண்டிக்கொண்ட முறைமையினை,

" மங்கை யொருபால் மகிழ்ந்ததுவும்
அன்றி, மணிநீள் முடியின்கண்
கங்கை தன்னைக் கரந்தருளும்
காதல் உடையீர்! அடியேனுக்கு
இங்கு நுமக்குத் திருமாலை
தொடுத்தென் உள்ளத் தொடையவிழ்த்த

திங்கள் வதனச் சங்கிலியைத்
தந்தென் வருத்தம் தீரும் ! என்றூர் ''

எனச் சேக்கிழார் பெருமான், சுந்தரரின் நயஞ்செறிந்த சொல்வன்மைத் திறம்விளங்கப் பாடியிருத்தல் காணலாம். இத்தகைய நயஞ்செறிந்த நல்லுரைகளால்,

" பாட்டுக்கோ வன்பினுக்கோ பத்திக்கோ அன்பர்தங்கள்
நீட்டுக்கெல் லாம்குறுகி நின்றாய் பராபரமே ''

என்றாற் போல, இறைவனைச் சுந்தரர் தாம் இழுத்த இழுப்புக்கெல்லாம் வளைந்து கொடுக்குமாறு செய்து ஏவற் பணிகொண்டனர். இவ்வுண்மையை,

" பொன்நவிலும் கொன்றையினாய் போய்மகிழ்க்கீழ்
இருஎன்று
சொன்னஎனைக் காணுமே சூளுறவு மகிழ்க்கீழே
என்னவல்ல பெருமானே இங்கிருந்தா யோஎன்ன
மன்னலரைக் கண்டாற்போல் உளோம்போகீர்
என்றானே ''

எனவரும் தேவாரப் பாடலால் தெளியலாம். ''வேட்கோச் சிறார் தேர்க்கால் வைத்த பசுமட் குரூஉத்திரள் போலத்'' தாம் வேண்டுமாற்றா னெல்லாம் இறைவனைத் தம் நயம்சிறந்த செந்தமிழ்ப் பாடல்களால் மயக்கி மகிழ்வித்து ஏவல்கொண்ட சிறப்புப் பற்றிச் சுந்தரரைத் 'தமிழ்ச் சமர்த்தர்' என்று தாயுமானவர் புகழ்ந்தமை பொருத்தமே யாகும் அன்றோ ?

" தன்மையி னால்அடி யேனைத்தாம்
ஆட்கொண்ட நாட்சபைமுன்
வன்மைகள் பேசிட வன்தொண்டன்
என்பதோர் வாழ்வுதந்தார்
புன்மைகள் பேசவும் பொன்னைத்தந்
தென்னைப் போகம் புணர்த்த
நன்மையி னார்க்கிடம் ஆவது
நந்திரு நாவ லூரே ''

முடிவுரை :

இதுகாறும் கூறிய சிலவற்றால் சுந்தரரின் அருமை பெருமைகளையும், அவர்தம் செந்தமிழ்த் திருப்பதிகங்களின் சிறப்புக்களையுமெல்லாம், ஓரளவேனும் உய்த்துணர்ந்து கொண்ட நாம், 'தமிழ்ச் சமர்த்தர்' எனத் தாயுமானவர் முதலிய சான்றோர்கள் பலரும் போற்றிய நம் சுந்தரரை வழிபட்டு, அவர்தம் தேவாரத் திருப்பதிகங்களை ஓதியுணர்ந்து உய்வதற்கு முயலுவோமாக !

நந்தலில் சீர்க்கொ ழும்பு
நகரின்கண், விவேகா னந்தர்
செந்தமிழ்ச் சபையார் கேட்பத்
திருக்கேதீச் சுரநற் றொண்டர்
கந்தையா வைத்ய நாதர்
கவின்பெருந் தலைமை யின்கீழ்ச்
சுந்தரர் பற்றிச் செய்த
சொற்பொழிவு இதுவாம் நன்றே

— ந. ரா. முருகவேள்



# நிறைவு விழா

நிறைவு விழா: கோட்டாறு தேசிய விநாயகர் ஆலயத்தில் 31—3—62 முதல் சைவப்புலவர் வித்துவான் சி குமரேசப்பிள்ளை அவர்களால் நாள்தோறும் நடைபெற்று வந்த பெரியபுராண விரிவுரை 9—5—62 அன்று நிறைவுற்றது நிறைவு விழாவில் திருவாளர்கள் மகாவித்துவான் கே. ஆறுமுக நாவலர், டி. ஆறுமுகம்பிள்ளை, வித்துவான் வீரசிவம், டி. அம்பலவாணன், பிரமானந்த சுவாமி நாடார், கவிஞர் தே ப. பெருமாள், அனந்த கிருஷ்ணன் B.SC., B T., வித்துவான் சிவகுருநாதபிள்ளை ஆகியோர் கலந்து கொண்டு சிறப்பித்தனர். விரிவுரையாளருக்குப் பொற்கிழி முதலிய பரிசுகள் வழங்கப்பட்டன.

# திருக்குறளும் சமயமும்

பேராசிரியர் சரவண ஆறுமுக முதலியார்,
எம்.ஏ., பி.ஓ.எல்., எல்.டி.,
முதல்வர், பழனியாண்டவர் கீழ்த்திசைப் பண்பாட்டுக்
கல்லூரி, பழனி.

இவ்வுலக வாழ்க்கையில் நாம் அடையக் கூடிய பெரும்பேறுகளை (Supreme aims of existence) தமிழ்ப் பெரியோர்கள் அகம்புறமென இருகூறாகப் பகுப்பர். அகங்கை இரண்டுடையார்க்குப் புறங்கையுமிரண்டாயினாற் போல, உடலும் உயிரும் போல், இணைந்தும் பிணைந்தும் ஒன்றுபட்டு முடிவில் ஒரு 'அந்தமிலின்பத்து அழிவில்' நிலைக்குக் கொண்டு போய் விடவேண்டும். அதை வீடென்பர். வீடே, உலகப் பற்றுக்களினின்று விடுதலை பெற்றுப் பேரின்ப மெய்துவதே. எல்லோரும் அடைய வேண்டிய முடிந்த குறிக்கோளாகும். (Ultimate object of achievement) அறம், பொருளின்பங்கள் அதனை அடைவதற்குரிய வழிகள். அவ்வழிகள் தாமும் அறத்தை அடிப்படையாகக் கொண்டியங்குவன. "சிறப்புடை மரபின் இன்பமும் பொருளும், அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல" என்னும் ஆன்றோர் வாக்கை நோக்குக. அறம் பொருளின்பம் வீடு என்ற இந்நானெறிகளும் அகம் புறம் என்ற இருகூறுகளில் அடங்கி, அவற்றினின்று விரிந்து வந்தன என நூலோர் நுவல்வர். இவ்வீடு பேற்றினை ஒல்காப் புலமைத் தொல்காப்பியரும்,

> "காமஞ் சான்ற கடைக்கோட் காலை
> ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
> அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
> சிறந்தது பயிற்றல் இறந்ததன பயனே"

என்ற நூற்பாவில் விளக்கி, சிறந்தது என்னும் செஞ்சொல்லால் அந்நிலையைக் குறித்துள்ளனர். இவர் வழி நின்றே தமிழ்மறை வகுத்த தெய்வப் புலவர் திருவள்ளுவரும் "பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்

---

பழநியில நிகழ்ந்த சமாஜ ஆண்டு விழாவில்
ஆற்றிய சொற்பொழிவு

செம்பொருள் காண்ப தறிவு'' என்று அவ்வீட்டு நிலையைச் சிறப்பு அல்லது செம்பொருள் காண்பதாகச் செப்புவர்.

இச்சிறப்பு அல்லது செம்பொருள் காணும் நெறியை ஒவ்வொரு நாட்டிலும் அவ்வந்நாட்டில் அன்று முதல் இன்று வரை தோன்றி, வளர்ந்து உருவாகி இருக்கும் சமயங்கள் (Religions) அவற்றின் மெய்யுணர்வு (Philosophy) கண்ட நூல்கள் வழியாக, மக்களுக்கு அறிவுறுத்த, அவற்றின் நடைமுறைகளாகத் திருக்கோயில்கள், வழிபாடுகள், வழிபாட்டு முறைகள் மெய்யுணர்வு நூல்களாகிய சாத்திரங்கள் (Philosophical texts) போற்றி நூல்களாகிய தோத்திரங்கள் (Devotional literature) முதலியன எல்லா நாட்டிலும் தோன்றி மக்களை நன்னெறிப்படுத்தி வருகின்றன.

இவற்றுள் சமயம் என்னும் சொல்லைக் குறிக்கும் 'Religion' என்ற ஆங்கிலச் சொல் 'Relegere' என்னும் இலத்தீன் மொழிச் சொல்லிலிருந்து அல்லது 'Religare' என்னும் இலத்தீன் சொல்லிலிருந்து பிறந்திருக்கலாமென்றும், முதலது 'திரும்பத் திரும்பப் படிக்கப்பட்டுச் சிந்திக்கப்பட்டது'' என்ற பொருளையும், பின்னது 'கட்டுவது' என்ற பொருளைத் தருவதாகவும் அக்ஸ்ஃபோர்ட் புதிய ஆங்கில அகராதி கூறுகின்றது. சமய அறநெறிக் கலைக் களஞ்சியம் (Encyclopaedia of Religions and Ethics) இங்ஙனமே கருதுகிறது. 'Words and their Ways' by Greenough and Kiredge) என்னும் நூலில் 'கட்டுவது என்ற பொருளை இச்சொல் நல்குவதாக வந்துள்ளது. 'கட்டுவது' என்ற பொருளிலேயே மேலைநாட்டு மெய்யுணர்வு நூற்புலவர், இச்சொல்லைப் பெருவரவிற்றாக வழங்கி வருகின்றார்கள். 'கட்டுவதாவது' மனத்தைப் பொறிவழி போகாது அறிவினால் கட்டி, கடவுள் உலகு உயிர் என்னும் முப்பொருளியல்புகளை ஆராயத் தூண்டி மனத்தை ஒரு நெறிப் படுத்துவதாகும். அறிவாற்றல் மிக்க சான்றோர்கள் கட்டியதுமாம். இச்செம்பொருளிலேயே சமை என்னும் பகுதியினடியாகச் சமயம் என்னும் சொல்லும் நந்தஞ் செந்தமிழ் மொழில் ஆகியிருக்கிறது என்பர், மெய்யுணர்வு நூல்வல்ல தொல்லாணைத் துறைபோகிய நல்லாசிரியர்.

"விரும்பும்சரியை முதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்புமலர் காய்கனி போல் அன்றோ பராபரமே"

"மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர்
வார்த்தை சொல்லச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே"

என்று முற்றத் துறந்த முனிவராகிய தாயுமானவர் சமய நெறிகளையும் அவற்றின் முடிந்த பயனையும் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தமை காண்க.

இந்நெறிகளின் மெய்யுணர்வைப் பிழிந்தெடுத்துக் காட்டும் வாக்குகளில் தலைசிறந்தவற்றைத் தொகுத்து அவ்வந்நாட்டினர் தத்தம் மறை (வேதம்) என வகுப்பர். 'இலைமறைகாய் போல' இம்மறைகள் ஆன்றோர்களின் அமுதவாக்குகளின் உறுதிப் பொருளை, உள்ளார்ந்து வைத்திருக்க, இலையை நீக்கிக் காயைப் பார்த்துப் பறிப்பது போல, சற்று உற்று நோக்கி உணர்ந்து கொள்ளலாம். இம்மொழிகள் மெய்யுணர்வுற்ற செந்தண்மை பூண்ட அந்தணாளர்களால் உறுதியாக அறுதியிட்டுக் கூறப்பெறுவன. அவைவழி நின்று பயன் பெறுதலே நம்மனோர் கடமையாகும். "நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த, மறைமொழிதானே மந்திரமென்ப" என்ற தொல்காப்பியர் கூற்றாலும் 'நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து மறைமொழி காட்டிவிடும்" என்ற திருக்குறட்பாவாலும் மறைகளின் மேன்மையை நாம் உய்த்துணரலாகும்.

ஒரு ஊருக்குப் போவதற்குப் பலவழிகள் இருக்கின்றன. அவையனைத்தும் அவ்வூருக்கே நம்மை அழைத்துக் கொண்டு செல்லுகின்றன. ஆறுகள் பலவாக இருப்பினும் அவை இறுதியில் ஒரே கடலிற் சென்று கலக்கின்றன. அது போன்றே பலநாடுகளிலும் அவ்வந்நாட்டு இயற்கை, சூழ்நிலைகளுக்கேற்பப் பல சமயங்கள் தோன்றினும் முடிவில் அவைகாட்டும் பொருள் ஒன்றேயாகும்.

'நதியுண்ட கடலெனச் சமயத்தை உண்ட பரஞான
வானந்த வொளியே
நாதாந்த ரூபமே வேதாந்த மோனமே'

என்று மலைவளர் காதலியைப் பார்த்துத் தாயுமானவர் பேசுகிறார்.

'தொக்கிலங்கு பாரெல்லாம் பரந்தோடித் தொடுகடலே
புக்கன்றிப் புறநிற்க மாட்டாத மற்றவை போல்
மிக்கிலங்கு முகில் நிறத்தாய் வித்துவக் கோட்டம்மாநின்
புக்கிலங்கு சீரல்லாற் புக்கிலன் காண புண்ணியனே''

என்பர் தொண்டர் அடிப்பொடி ஆழ்வார். இவ்வாறு மக்கட் டொகுதிகளும், நாடுகளும், மொழிகளும், பலபிரிவு களாக இருப்பதைப் போன்றே, சமயங்களும், அவ்வந் நாட்டினரின், மொழியினரின் அறிவாற்றல்களுக்கும், கால, இடங்களுக்கும் ஏற்றவாறு வெவ்வேறு நிலைகளில் பலதிறப்பட்டனவாக அமைந்திருப்பினும், அவற்றின் நெறிகளாலும் குறிகளாலும் காணப்பெறும் கடவுட் காட்சி ஒன்றே என்பதை ஆற்று உவமையால் விளக்க வந்த கம்பநாடர்

''கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையின் மறைகளாலு மியம்பரும் பொருளீ தென்னத்
தொல்லையின் ஒன்றே யாகித் துறைதொறும் பரந்தசூழ்ச்சிப்
பல்பெருஞ் சமயஞ் சொல்லும் பொருளும் போற்
பரந்த தன்றே''

என்று அழகுற எழுதிப் போந்தனர். ''விரிவிலா அறிவி னார்கள் வேறொரு சமயஞ் செய்தே எரிவினாற் சொன்னா ரேனும் எம்பிராற் கேற்றதாகும்'' என்ற ஆளுடைய அரசை ஒட்டியே சிவாச்சாரியர் அருள் நந்தியாரும் ''ஓது சமயங்கள் பொருளுணரும் நூல்கள் ஒன்றோடொன் றொவ் வாமல் உளபலவு மிவற்றுள் யாது சமயம் பொருணூல் யாதிங் கென்னில் இதுவாகும் அதுவல்ல எனும்பிணக்க தின்றி நீதியினால் இவையெல்லாம் ஓரிடத்தே காண நிற்பதியா தொரு சமயம் அது சமயம் பொருணூல்'' என்று உறுதிப்பட இவ்வுண்மையை அறுதியிட்டுரைக்கின்றனர். தமிழ்ப் பெரியார் திரு வி கவும் 'உலகிலுள்ள எல்லாச் சமயங்களும் ஒரு கடவுளையே பல பெயரால் பல வடிவங் களாகப் போற்றிப் புகழ்கின்றன. இவ்வுணர்வோடு எச்சமயத்தை ஆய்ந்தாலும் அச்சமயத்தில் சமரச மணங் கமழ்வது காணலாம். அம்மணங்கமழப் பெறாத சமய மொன்றிருப்பதாகத் தெரியவில்லை. இருக்குமேல் அது கடவுள் நெறிகாட்டும் சமயமாகாது. எச்சமயம் எல்லாச் சமயங்களையும் சகோதரச்சமயங்களாகத் தழுவுகின்றதோ

அது சமரச நோக்குடைய சன்மார்க்க சமயமென்று போற்றப்படும். எச்சமயம் பிற சமயங்களைப் பொய் யெனக் கருதுகிறதோ, பழிக்கிறதோ அது சமரச சன் மார்க்கத்தை வளர்ப்பதாகாது. சமரச நோக்குடைய சமயமெதுவோ அது சாதிமதம், பாஷை, நிறைவேற்று மைகளைப் பாராட்டாது எல்லா உயிர்களிடத்தும் ஒரே வித அன்பு செலுத்துமாறு மக்களை ஏவும். அச்சமயம் கைம்மாறு கருதாப் பணியாற்றுமாறு போதிக்கும். தனக் கென வாழாது பிறர்க்கென வாழுமாறு அறிவுறுத்தும், தியாக உணர்வு நல்கும். உயர்வு தாழ்வை ஒதுக்கும். இன்னோரன்ன விழுமிய நோக்கங்களையுடைய சமய மெதுவோ அதுவே சமயம் என உண்மைச் சமயத்தின் உயரியல்புகளை எடுத்தோதினர். முறைவழி உணர்ந்த சமயப் பொறையும், இது அது என்ற வேற்றுமை பாராட்டாத சமயப் பொது நோக்கமும் தற்கால உலகுக்கு மிகவும் வேண்டற்பால தென்பதனை வருமுன் காணும் வல்லமையால் சமரச சன்மார்க்க நெறிவகுத்து, ஆன்மநேய ஒருமைப்பாடுணர்த்தி உள்ளொளி பெருக்கிய வள்ளலார் 'பெருகிய பேர் அருளாளர் அம்பலத்தே நடிக்கும்.. ...............விளையாட்டே'' என்றும் 'எவ்வுயி ரும் பொதுவென...............தெரிந்தேன்'' என்றும் எத்துணையும் பேதமுறாது...............தெரிந்தேன்'' என் றும் திருவருட்பாக்களால அரும்பெறலுண்மைகளை எடுத் தோதியுள்ளனர்.

தமிழ்நாடு செய்த தவப்பயனாய்த் தோன்றியருளிய தெய்வப் புலமைத் திருவள்ளுவர் திருவாய் மலர்ந்தருளிய தமிழ் மறையாந் திருக்குறளும் இத்தகைய தொரு சமயப் பெருவாழ்க்கையையே வகுத்துச் செல்கின்றது. எப்பாவ லரும் இயையும் முப்பால் நூலில் கூறப்பெற்ற அறம் பொருளின்பங்களிடையே வீட்டு நெறியாம் சமயப் பெரு வாழ்வும் திட்டப்பெற்றுள்ளதோ? என்ற வினவும் எழற் பாலதே. முப்பாலில் நாற்பால் மொழிந்தவர் என்றும், அறனறிந்தேம் ஆன்ற பொருளறிந்தேம் இன்பின் திற னறிந்தோம் வீடு தெரிந்தேம் என்றும், பலரும் திருக்குற ளில் நாற்பாலும் பயிலும் பான்மையைப் பாராட்டு வதால் திருக்குறள் வீடும் தரும் என்பது விளங்கும்.

(தொடரும்)

# "வழிபாடு"

(திருமதி. சு. ராஜேஸ்வரி அம்மையார்)

இறைவனை அடைவதற்கு உயிர்கள் கடைப்பிடித்து ஒழுகும் ஓர் அறவழியே வழிபாடாகும். வழிபாட்டின் மூலம் அழியாத பேரின்பத்தை அடைவதே மக்கள் நோக்கமாக அமைகின்றது.

## பழந்தமிழர் வழிபாடு :

ஆதிமனிதர் குகைகளிலும் மலைகளிலும் வசித்த போது பல இன்னல்களுக்குட்பட்டனர். வசதிகள் மிகக் குறைந்த காலம் அது. ஆக இயற்கையின் அல்லல்கள் அவர்களைத் துன்புறுத்தின. காற்று, மழை, இடி, இவற்றைக் கண்டு அஞ்சினர். பின்னர் அவற்றையே வழிபடவும் நேர்ந்தனர். பின் அவற்றால் பெறும் சில நன்மைகளைக் கருதித் தாம்செய்வது சரி எனவும் நினைக்கலாயினர். சூரியன் 'இருள்' என்ற அச்சத்தைப் போக்கி நிம்மதி அளித்தது–நெருப்பு, கொடிய மிருகங்களினின்றும் அவர்களைக் காப்பாற்றியது–உணவு வகைகளைப் பாகப்படுத்தியது. மழை பல வகைகளில் உதவி புரிந்து தமக்கு உதவியாக இருந்தது. சூலம், வேல், போன்ற கருவிகளையும் போற்றி வாழ்ந்தனர். நாளடைவில் அறிவும் அநுபவமும் வளர ஆரம்பித்தன. வழிபாட்டு வகைகளிலும் இவர்கள் முற்போக்கடைந்தனர். கேளிக்கைகள், திருவிழாக்கள் ஆரம்பமாயின. தொல்காப்பியம், சங்கநூல்கள் ஆகியவற்றில் நால்வகை நிலங்களில் மக்கள் வாழ்ந்து அதற்குரிய வழிபாட்டுத் தெய்வங்களைப் போற்றிய செய்திகளைக் காண்கின்றோம். மிகப் பழைய ஆலயங்கள் மண்சுவர்களோடு கூரை வேயப் பெற்றிருந்தன. நாளடைவில்சுட்ட செங்கற்கள் உபயோகத்திற்கு வந்தன. பின்னரே கருங்கற்றிருப்பணிகள் நடைபெற்றன என்பதை வரலாறு தெரிவிக்கின்றது.

மிகப்பழங்காலத்திலிருந்தே ஒவ்வொரு வகையாக வழிபாடு நடைபெற்று வந்திருக்கின்றது. அவரவர் அறிவிற்குப், பக்திக்கும், நம்பிக்கைக்கும், அநுபவத்திற்கும் ஏற்ப வழிபாடு நிகழ்ந்து வந்துள்ளது. சாதாரண உயிர்ப்பலி

கொடுத்து வழிபடும் நிகழ்ச்சிகள் இன்று கூட சிற்சில இடங்களில் இருப்பதைக் காண்கிறோம்–இதுமுதல் பெரியமகான்கள் அமைதியாக ஆழ்ந்த யோகத்தமர்ந்து அடியவர்க்காக வாழும் வாழ்க்கை வரை வழிபாட்டில் இடம் பெறுகின்றது.

## வழிபாடு யாரால் எப்போது செய்யப்படுகின்றது?

துன்பம் வரும்போது மட்டும் சிலர் வழிபடுகின்றனர். எப்பொழுதுமே வழிபாடாற்றுகின்றனர். உலகில் எத்தனை கோடிமக்கள் உள்ளனரோ அத்தனை கோடிவகையாக வழிபாடு நடைபெறுகின்றதென ஒரு பெரியவர் கூறியுள்ளார்.

"There are as many different ways of praying as there are different individuals ,,

எல்லோருமே எதாவது ஒரு சமயத்தில் கட்டாயம் ஆண்டவனை வழிபட்டே ஆக வேண்டும். இதில் உயர்ந்தவர், தாழ்ந்தவர், என்ற பாகுபாடில்லை-பேராசிரியர் வில்லியம் ஜேம்ஸ் என்பவர்கருத்தில் " வேறு ஒன்றும் செய்யத் தெரியாதவன் கூட ஆண்டவனிடம் முறையிடும் முறையை அறிந்துள்ளான்" எனக் கூறுகின்றார். காலரிட்ஜ் என்ற பேரறிஞர் மனிதன் அறிவு வளர்ந்து கொண்டே வரும் போது அதன் சக்தி இறுதியாக அவனை வழிபாட்டில் கொண்டு அழுத்துகின்றது" என உரைக்கின்றார். கார்லைல் என்பவர் "மனிதசுபாவமே வழிபாடு செய்வதிலேயே அமைந்துள்ளது. ஆக தனிமுயற்சியின்றி நடை பெறும் ஒரு செயலாகவே அதைக் கருத வேண்டும் என்கின்றார்". வழிபாடு பலவகையாகச் செய்யப்பட்டு வருவதை நாம் காண்கின்றோம். மிகுந்த ஆரவாரத்துடன், உரக்கச் சத்தமிட்டுப் பாடல்களைப் பாடிப்பரவசப் படுபவரும் உண்டு. அமைதியாக ஒருவருக்கும் தெரியாமல் ஒரு புறமிருந்து வழிபடுபவருமுண்டு. கடவுள் சம்பந்தப்பட்ட பொருள்களைப் பார்க்கும் போது அந்த ஞாபகத்துடனிருப்பவரும் உண்டு–உதாரணமாக ரயிலிலோ அல்லது பஸ்ஸிலோ பிரயாணம் செய்யும் போது கோபுரத்தைக் காணும் போது ஒரு கும்பிடுபோட்டு விட்டு அடுத்த நிமிஷமே வீண்விதண்டாவாதங்களில் இறங்

குபவர் பலரைப் பார்க்கிறோம். உண்மையான வழிபாடு, எவ்வளவு குறுகிய காலமாயிருப்பினும் ஆண்டவனோடு கலந்து உணரும் நிலையை அடைய முயற்சிப்பதே யாகும். பலமணி காலம் பலவித கிரியைகளோடு சிவபூசை செய்தும் ஒரு வினாடிகூட ஆண்டவனுடன் கலந்து கொள்ளமுடியாத நிலையைவிட, சில நிமிஷங்களாவது மனத்தை அடக்கி ஆண்டவனுடன் உறவு கொள்வதே சிறந்த வழிபாடாகும். இதைக் கூறுவது மிக எளிதாகும். நடைமுறையில் செயலாற்றி உணர்வு பெறுவது நமது பூர்வபுண்ணியப் பயனே யாகும் என ஒரு ஆங்கில அறிஞர் அழகாகக் கூறுகிறார்.

"It is lip work and not heart work"

### வழிபாடு அவசியமா ?

ஒருவனுக்கு மூச்சுவிடுவது எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியம் வழிபாடு செய்வதாகும். உயிரை உடலோடு பிணைக்க மூச்சு அவசியமாகிறது. அங்ஙனமே உயிரை இறைவனோடு பிணைக்க வழிபாடு வேண்டப்படுகின்றது.

வழிபாட்டிற்கு நம்மை ஒழுங்கு படுத்திக் கொள்ள வேண்டியதாகிறது. இதற்கு மூன்று இன்றியமையாதவையாகின்றன. அவை தூய உள்ளம் (Pure Heart) உயர்ந்த வாழ்க்கை (Noble life) அறவழி (Moral Conduct) இதைச் சுருக்கச் சொல்லி விளங்கவைத்துள்ளார் வள்ளுவப் பெருந்தகையார் "பொய்தீர் ஒழுக்க நெறிநின்றார் நீடுவாழ் வார்" எனவும் "ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்" எனவும் கூறியுள்ளார்.

வழிபாட்டிற்கு அடிப்படையாக வேண்டியது நம்பிக்கை. மனித வாழ்க்கையே நம்பிக்கையைக் கொண்டு தான் நடக்க வேண்டியுள்ளது. நம்பெரியவர்கள் அல்லது முன்னோர்கள் சில வழிகளில் நடந்து பல நன்மைகளைப் பெற்றனர் என்பதை உணர்ந்த நாமும் அதே வழிகளைப் பின்பற்றி நடக்க வேண்டாமா ? வழிபாட்டின் மூலம் சாதிக்க முடியாத சாதனைகளைப் பெற்ற பலரது வாழ்க்கை

நம் உணர்வுக்கு வருங்கால் நாமும் அதை அடைய முயற்சிக்க வேண்டாமா?

டென்னிசன் என்ற ஆங்கிலக்கவிஞர் கூறுகிறார்.

"More things are wrought by prayer than this world dreams of"

இத்தகைய நம்பிக்கையை நாம் பெறுவதற்கு இறைவன் அருள் வேண்டும். இதைத்தான் "அவன் அருளாலே அவன் தாள் வணங்கி எனவும்" "அவனருளே கண்ணாகக் காணினல்லால் இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொணாதே" எனவுங் கூறப் பட்டுள்ளன. ஔவையார் குறள்,

"எல்லாப் பொருளும் முழக்கலாம் ஈசன்தன்
தொல்லை அருள் பெற்றக் கால்"

எனக்கூறுகின்றது.

நம்சைவ சமயத்தில் வழிபாட்டை நான்கு மார்க்கங்கள் மூலம் நம் சமயாசாரியர்கள் நடத்திக்காட்டியுள்ளனர். அவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பதாகும். சுருங்கக் கூறின் சரியை உடம்பும் உடம்பினுல் செய்யும் தொண்டும்; கிரியை உடம்பும் மனமும் சேர்ந்து வழிபாடாற்றுவது. யோகநிலை கடவுளைத் தம் அகக்கண்ணால் கண்டுவக்கும்காட்சியாகும். இம்மூன்று நிலையுங்கடந்தபின்னர் அடையும் பேறே ஞானமாகும்–இந்நான்கு மார்க்கங்களில் திருநாவுக்கரசர் தாசமார்க்கத்தையும், திருஞானசம்பந்தர் சற்புத்திரமார்க்கத்தையும், சுந்தரமூர்த்திநாயனார் சகமார்க்கத்தையும், மணிவாசகர் சன்மார்க்கத்தையும் நிலைநாட்டினர் எனக் கூறுவதுண்டு.

வழிபாட்டைத் தனியே செய்து தனக்கு நன்மை தேடிக் கொள்வார் பலர். கூட்டமாக வழிபாடாற்றிப் பலருக்கும் நன்மை பயக்குமளவில் நடத்துபவருமுண்டு. கிருத்தவ, முகம்மதிய மக்கள் பல்லாயிரக்கணக்கில் கூடி ஒழுங்காக வழிபாடு நடத்துவதை நாம் பார்க்கிறோம். நம் மக்களும் நடராஜர் தெரிசனம் அண்ணாமலையார் தீபம் போன்ற விழாக்களில் பலலட்சக்கணக்காகக்கூடினாலும் ஒழுங்காகவும்

அமைதியாகவும் வழிபட இன்று அறிந்து கொள்ளவில்லை. இது நடை பெற்றால் வழிபாட்டின் பலன் இன்னும் அதிகமாகும். தோத்திர ரூபமாகப் பல ஆசாரியப் பெருமக்களியற்றி உபகரித்துள்ள பாடல்களைப் பாடி வழிபடலாம். மந்திரங்களை ஜெபித்து அதனால் பலனுறலாம். "உரு ஏற உரு ஏறத்திரு ஏறும்" என்ற பழையமொழி ஒன்றுண்டு. வழிபாட்டிற்கு ஏதுவாக இருப்பது தியானிக்கப்படும் உருவம், பின்னர் அதற்குரிய மந்திரம், பாடல்கள். மூன்றாவதாக அடியார்கள் கூட்டுறவாகும்.

உரிய காலத்தில் அதற்கு வேண்டிய நியம நிஷ்டைகளுடன் ஒருவன் தன் வழிபடு தெய்வத்தின் உருவத்தை மந்திரங்களுடனும் தோத்திரப் பாக்களாலும் வழிபாடு செய்து வருவானேயாகில், நிச்சயமாக ஆண்டவன் அருளுக்குப் பாத்திரமாவான். வழிபாட்டின் சக்தி ஒன்றே மகாத்மா காந்தியைக் கண்டு அஞ்சவேண்டியதில்லையை உலகப்பெரும் சாம்ராஜ்யமாகிய பிரிட்டனுக்கு அளித்தது.

வழிபாட்டின் பலனாகப் பல நோய்கள் குணமடைந்துள்ளன. இன்றும் பத்திரிகைகளில் இத்தகைய செய்திகள் வந்து கொண்டுள்ளன. சமயவாழ்க்கையை நடத்தினால் தான் அதன் உண்மைகளைக் கண்டு உணர்ந்து அநுபவிக்க முடியுமே யொழிய அதைப்படிப்பதால் மட்டும் தெரிந்து கொள்ள முடியாது. வழிபாட்டின் மூலம் கடவுளை நம்மிடமே அழைத்துக் கொள்ள முடிகின்றது. அகஸ்டின் என்ற பாதிரியார் "Give me thine own self" எனவும் கெம்பிஸ் என்பவர் "Bestow on me thy self" எனவுங் கூறியுள்ளமை மணிவாசகரது,

"தந்தது உன் தன்னைக் கொண்டது
தன்னைச் சங்கரா யார்கொலோ சதுரர்என்" என்ற உண்மை வாசகத்தை உறுதிப்படுத்துகின்றதல்லவா!

தொண்டரஞ்சுகளிறும் அடக்கிச் சுரும் பார்மலர்
இண்டைகட்டி வழிபாடு செய்யுமிட மென்பரால்
வண்டு பாட மயிலால மான்கன்று துள்ளவரிக்
கெண்டைபாயச் சுனைநில மொட்டலருங் கேதாரமே"

(பழநியில் நிகழ்ந்த சமாஜ ஆண்டு விழாவில் ஆற்றிய சொற்பொழிவு 5—12—61)

# சித்தர் கண்ட சித்தாந்தம்

(திருமதி. அ. காமாட்சி குமாரசாமி, M. A.)

**சித்தர் :**

முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானை "உண்மை, அறிவு, ஆனந்த" வடிவமாக்கிச் சச்சிதானந்தம் (சத்+சித்+ஆனந்தம்) என்றே அழைப்பது சைவ மரபு. 'சித்' என்ற வடசொல் தமிழில் அறிவு என்றே பொருள்பெறும். சித்தர் என்போர் "அறிவர்" என்றே தொல்காப்பியர் காலத்தினின்றும் வழங்கப் பெற்றனர். எனவே பழந் தமிழ் நாட்டு அறிவர் மரபில் தோன்றியவரே இடைக் காலச் சித்தரும். சித்தர் கண்ட கலைகள் பைந்தமிழ் நாட்டின் பழம்பெருங் கலைச் செல்வங்கள். உடலையும் உயிரையும் ஒன்றுபடுத்தி, இரண்டையும் இயற்கை முறையிற் பேணி, உடலைக் கொண்டே ஆன்ம வித்தையை இயற்றி இறைவனை உள்ளுக்குள்ளே கண்டு பேரின்ப முற்றவர் இதுபற்றியே நீண்ட ஆயுளைத்தேடியவர். அதற்கான இயற்கை மருத்துவ முறைகளை நாடியவர். ஆன்ம முன்னேற்றத்திற்கான இவ்வுடலைப் பேணத் துணை புரிந்த இம் மருத்துவக்கலை வெறும் மருத்துவக்கலையளவிலே இன்றும் நின்று நிலவப் பார்க்கின்றோம். மருத்துவத்தின் ஒரு கூறாய் அமைந்த ரசவாதம் முதலியனவும் இடையிற் புகுந்து அருமையான சித்துக்கலை நம் நாட்டிவ் அடியோடு மறைவதற்கே அடிகோலிவிட்டது. அக்கலைச் செல்வத்தின் உயிர்நாடியான— ஆன்மக் கலையும் நமக்கு விளங்காப் புதிராகவே நின்றுவிட்டது. எனினும் அவர்கள் கண்ட ஆன்ம வித்தையும், அதனை மிக எளிய தெளிய நடையிலே எடுத்துரைக்கும் நயத்தினையும் அவரது பாடல்களிலே காண்கிறோம். பற்பல பாடல்களின் பொருள் விளங்கவில்லையாயினும் சிற்சில பாடலகளேனும் பொருள் விளங்குமாறு திகழ்கின்றன.

**சித்தாந்தம் :**

இனி, சித்தாந்தம் என்ற சொல், அறிவின் எல்லை, அறிவின் முடிவு,முடிந்த முடிவு என்று பொருள் படும்

(சித்தம்+அந்தம்) மனமொழி மெய்க்கெட்டாத பரம்பொருள் நிலையை, மெய்யுணர்வாம் உள்ளுணர்வு கொண்டு உணர்தலையே இச்சொல்குறிக்கும். மக்களறிவின் முடிவும் இறைவனை யறிதலேயாகும் என்ற கருத்துத் தோன்றத் திருவள்ளுவரும்,

கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்ருள் தொழாஅ ரெனின்

எனக் கூறினர். சைவ சமயத்திற்காக இத்தொடர் பின்னர் சைவத்தின் முடிந்த முடிபு அல்லது சைவ சமயத்தின் கொள்கைகள்—உண்மைகள் எனப் பொருள் பெற்றது. இதனை விளக்கப் பதினுன்கு சைவ சித்தாந்த சாத்திரங்களும் எழுந்தன. சைவத்தின் பெருமையைப் பக்திச் சிறப்பைச் சைவத்திருமுறைகளாம் தோத்திர நூல்கள் ஒருபுறம் விளக்க, சைவத்தின் தத்துவங்களை இச்சாத்திர நூல்கள் அறிவுத்திறத்தால் விண்டு விண்டு உலகத்திற்குப் பறைசாற்றின. சைவமெனுஞ் சமயமான இலக்கியத்திற்குச் சைவசித்தாந்தமெனும் இலக்கணம் தோன்றிற்று எனலாம். பதினுன்கு சித்தாந்த சாத்திரங்களுள் உந்தி, களிறு, போக ஏனைய பன்னிரண்டும், பன்னிரண்டு சூத்திரங்களாலாய (தமிழின் உயிரெழுத்தே போன்று) மெய்கண்டாரின் "உயர் போத"மாய சிவஞானபோதமும். அதனையே பெரிதும் விளக்கவந்த பெருநூல்களே யாகும். எனவே சிவஞான போதத்தினையே சைவ சித்தாந்தத்தின் சாரமாகக் கொள்ள வேண்டும்.

இடைக்காலச் சித்தர் பதினெண் சித்தர் எனப்பெறுவர். இவரது பெயர்ப்பட்டியலில் அகத்தியர், திருவள்ளுவர், திருமூலர் என்ற பெயர்கள் காணப்படினும் இவர் பழங்காலத் தலைவரல்லர் என்பது புலப்படும். திருமந்திரம் பாடிய திருமூலரும் இவ்வரிசையில் வைத்து எண்ணப் பெறுவது முண்டு. சித்தர்கலையறிவு அவரது பாடல்களில் மிகச் சிறந்து விளங்கக் காணலாம். இன்னும், படிக்காத பாமரர்க்கும் புலனுகும் எளிய தெளிய நடையில் அரிய பெரிய ஆன்மச் செய்திகளை அடக்கிக் கூறிய பாம்பாட்டி, குதம்பை, அழுகணி, கடுவெளி, அகப்பேய்ச் சித்தர் போன்றவர்களும் இடம் பெறுவர்.

இச்சித்தர்கள் சித்தாந்தக் கருத்துக்களை எங்ஙனம் எடுத்துரைக்கின்றனர் எனக்காண்போம். சைவசித்தாந்தத்தின் அடிப்படைக் கருத்தான பதி, பசு, பாசமெனும் முப்பொருள் உண்மையினை அவர்கள் முற்றிலும் உணர்ந்திருந்தனர்.

"பாசத்தை நீக்கிப் பசுவைப் பதியில்
நேசத்தி னுள்ளே நினைத்திருப்ப தெக்காலம்"

எனப் பத்திரகிரியார் புலம்புவார், திருமூலரும் தமது திருமந்திரத்தில்,

பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போல் பசுபாசம் அநாதி
பதியினைச் சென்றணுகாப் பசுபாசம்
பதியணுகிற் பசுபாசம் நிலாவே,"

எனச் சின்முத்திரைக்கே விளக்கங் கூறுவர். ஆணவம், மாயை, கன்மம் எனும் மும்மலக் காரியமாகவே உயிரின், தோற்ற நிலை, அழிவுக்குக் காரணம் எனுங் கருத்தை,

"மும்மல முஞ் சேர்ந்து முளைத் தெழுந்த காயமிதை
நிர்மலமாய்க் கண்டுவினை நீங்கியிருப் பதெக்காலம்,"
"செம்பினிற் களிம்பு போல் சிவத்தை விழுங்கி மிக
வெம்பிநின்ற மும்மலத்தை வேறு செய்வதெக்காலம்"

என்ற பத்திரகிரியாரின் வாக்கு புலப்படுத்தும்.

ஆன்மா என்ற ஒன்று இல்லைஎன்பதனாலேயே உண்டு எனும் கருத்தை,

"இல்லை இல்லை யென் றியம்புகின்ற வேழைகாள்
இல்லை யென்று நின்றதொன்றை அல்லையென் எலாகுமோ
இல்லையல்ல வென் றுமல்ல விரண்டு மொன்றி நின்றதை
எல்லைகண்டு கொண்டபே ரினிப்பிறப்ப தில்லையே"

என்ற சிவவாக்கியரின் வாக்கால் அறியலாம்.

மண்ணுலக வாழ்வினையும், மானிடஉடம்பினையும் மிகப் பழித்தவர் சித்தர் என்ற கருத்து பலருக்குண்டு. ஆயினும் ஆன்ம நெறிக்குப் பயன்படாத உடலையும் வாழ்வையுமே வெறுத்தனரேயன்றி, பெறுதற்கரிய இம்மானிட உடலை உண்மையில் மாயா இயந்திர தனுவாகவே கருதினர். அதனுள்ளே இறைவனைக் கண்டனர். அவ்வுடலின் கூறுகளையும், உள்ளே இயங்கவல்ல குண்டலி சுழுமுனை, கலை, நாடி, என்பவற்றையும் முக்கோண, அறுகோண, எண்கோண மென்ற குறிப்புக்களையும் நோக்குமிடத்து இப்பூதவுடல் உண்மையிலேயே வியத்தகு ஆற்றலும் அமைப்புங் கொண்ட அதிசயப் பொறியா? (மாயா இயந்திரதனு) என்ற எண்ணமே தோன்றும். இவ்வுடலுக்குள்ளே மறைந்து கிடக்கும் ஆன்மவாற்றலை யோகம், நிட்டை, முதலியவற்றால் அவர்கள் இயக்கி, செயற்கரிய செயல்களையும், சொல்லொணு ஆற்றலையும் பெற்றிருந்தனர் எனவறிந்து, இவ்வாறு இம்மாயாவியந்திரத் தனுவை இயக்கமுடியாது தவிக்கின்றவர், உண்மையிலேயே அருமையாய்ப் பத்துத் திங்களிலே புனையப்பெற்ற இப்பாண்டத்தைக் கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைப்பதாகவே தோன்றும்.

> "தேகமெனுஞ் சிவாலயமாம் — அதிற்
> சென்னிசிறுவாயில் கோபுரம்"
> "பூட்டைத் திறப்பதும் கையாலே — மனப்
> பூட்டைத் திறப்பதும் மெய்யாலே"

என இம்மெய்யெனும் உடலின் சிறப்பைக் குறிப்பர். ஆன்மீக முன்னேற்றத்திற்குப் பயன் படும் உடம்பின் சிறப்பைத் திருமூலரும் தமது திருமந்திரத்தில்

> "உடம்பினை முன்னம் இழுக்கென றிருந்தேன்
> உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்
> உடம்பிலே உத்தமன் கோயில்கொண்டானென்று
> உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே"

என்று கூறுவார்.

அத்தகைய உடம்பின் சிறந்த உறுப்புக்களாய ஐம்புலன்களையும் அடக்குதல், ஒடுக்குதல் என்றெல்லாம் அவர்கள் குறிப்பது, அப்பொறிகளைத் தம்வசம் விடாமல் தன்வசமாக்கி நன்னெறிப் படுத்தலையே குறிக்கும்.( Sublimation of senses ) புரண்டோடுகின்ற வெள்ளத்தை அடியோடு தடுப்பதைக் காட்டிலும் அதன் போக்கை மாற்றி, அழிவு நீக்கி ஆக்கத்தைத் தேடுவதை நீரின் மடைமாற்றம் எனக் குறிப்போம். இக்கருத்தமைந்த திருமந்திரச் செய்யுள் அறிவுப்புலனுக்கே அருவிருந்தாயமைவது.

> " தானே புலனைந்தும் தன்வசமாயிடும்
> தானே புலனைந்தும் தம் வசம் போயிடும்
> தானே புலனைந்தும் தன்னில் மடைமாறும்
> தானே தனித்தெம் பிரான் தனைச் சந்தித்தே "

சுந்தரர் தில்லைப் பெருமானைக் கண்டு சுவைத்த நிலையினைக் குறிக்கும்,

"ஐந்துபேரறிவும் கண்களே கொள்ள" எனத் தொடங்கும் பெரிய புராணச் செய்யுள் இத்திருமந்திரமாய இலக்கணத்திற்கோர் இலக்கியமாகும். நமது இறைவழிபாட்டிற்கு மிக இன்றியமையாப் பொருளான ஐஞ்சுடர்க் குத்துவிளக்கு ஐம்புலத்தூய்மையினைக் குறிக்கும். ஐம்புலனும் இறைவழிபாட்டிற்கான பெருவிளக்கு. (அகண்ட விளக்கு அல்லது காளவிளக்கு) என்ற கருத்தையே பின்வரும் திருமூலர் திருமந்திரமும் உணர்த்தும்.

> " உள்ளம் பெருங்கோவில் ஊனுடம் பாலயம்
> வள்ளற் பிரானுர்க்கு வாய் கோபுர வாசல்
> தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
> கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே

ஐம்புலனடக்கம் எளிதன்று பெருமுயற்சியாலும் இறைவனைச் சார்வதாலும் பெறப்படுவது என்பதனை,

> ஐந்து தலை நாகமடி — அகப்பேய்
> ஆதாயங் கொஞ்சமடி
> இந்த விஷந் தீர்க்கும் — அகப்பேய்
> எம்மிறை கண்டாயே

என்ற அடிகளாற் குறிப்பர்.

உடலைப் பற்றிய சித்தர்களின் கருத்தைப் போன்றே சிற்றின்பத்தையும், பெண்களையும் பற்றிய அவர் தம் கூற்று தவருக மதிக்கப்படுகின்றது. மேற்கூறிய வாறே ஆன்ம முன்னேற்றத்திற்குத் தடையாய் நிற்கக் கூடிய பெண்களையும் அத்தகைய மயக்கும் சிற்றின்பத் தையும் இழித்துப் பழித்துக் கூறினரேயன்றி ஆன்மத் துறைக்குத் துணையாக நிற்கும் பெண்மையைப் பெரிதும் போற்றியவர் ஆடவரின் ஆன்ம முன்னேற்றத்திற்கு அருந் துணையாய் நிற்கும் பெண்களைப் போன்ற பெருந்துணையும் வேறுண்டோ? மேலும் சிற்றின்பத்தைத் தக்கமுறையில் சுவைத்தவர்களன்றோ அதுபோன்று, ஆனல் ஆயிரமா யிரம் அதிகமாயும் அழியாததாயும் அமைந்த பேரின்பத் தைத் துய்க்க விழைவார்! இதுவே தமிழர் கண்ட தெய்வ நெறி—இல்லறத்தின் முடிவாய துறவுநெறி - இதனாலன்றோ மணிவாசகரது திருக்கோவையாரும் அகத்துறையில் அமைந்தது. சித்தர் பாடலுள்ளும், குதம்பை, அகப் பேய், அழுகணி, சித்தர்களின் பாடல்களும், வாலைக்கும்மி ஞானக்கும்மி போன்ற நூல்களும் பெண்களை முன்னிலைப் படுத்தியே (மகடூஉ முன்னிலை) அமைந்துள்ளன. பீர் முகமது என்பவர் இயற்றிய ஞானரத்தினக் குறவஞ்சி யில் (முகம்மதியரும் சித்தர் கலையால் ஈர்க்கப் பெற்றனர் என்பதற்கு இவர் எடுத்துக்காட்டு) சிங்கனது வினக் களுக்கு விடையிறுத்து அவனைத் தெளிவிப்பவளே சிங்கி தானே! சித்தத்தைச் சிவன்பால் வைத்து எதைச் செய்யி னும் அததனையும் இறைபணியாகவே கருதப்பெறும். அந்நெறியும் இறை பணி நிற்றலாகவே கருதப்பெறும். அழுகணி சித்தரின் கண்ணம்மா பாட்டிற் சிலவரிகள் மேற் கூறியவற்றை நன்கு விளக்கும்.

மாமன் மகளடியோ மச்சினியோ நானறியேன்
காமன் கணையெனக்குக் கனலாக வேதகுடி
மாமன் மகளாகி மச்சினியும் நியானல்
காமன் கணைகளெல்லாம்-என் கண்ணம்மா!
கண் விழிக்க வேகாதோ.

ஈண்டு, கண்ணம்மா தெய்வத்தின் வடிவாகவே கருதப் பெறும்.

பக்குவ மடைந்த ஆன்மாவாகிய இரும்பினைக்காந்தம் போன்ற இறைவன் இழுத்துக் கொள்வான் எனுங் கருத்தை

"காந்தம் வலித்திரும்பைக் கரத்திழுத்துக் கொண்டது போல்
பாய்ந்து பிடித்திழுத்துன் பதத்தில் வைப்பதெக் காலம்"

என்ற பத்திரகிரியார் பாடல் குறிக்கும்.

ஐம்புல வேடரின் அயர்ச்சி நீங்க அன்பர்க்கு அருள் நெறி காட்டவரும் குருவரவும் சித்தர்க்கு உடன்பாடே,

"அருவா யுருவாகி ஆதியந்த மாகி நின்ற
குருவாகி வந்தெனையாட் கொண்டருள்வ தெக்காலம்"

என்பார் பத்திரகிரியார்.

ஊனக்கண்ணால் உணரமுடியாப் பதியினை ஞானக் கண்ணால் சிந்தையில் நாடிக்கண்டவர் சித்தர் என்பதைப் பின் வரும் பகுதிகள் நன்கு விளக்கும்.

கட்புலனாற் காண வொண்ணாய் — பசுவே
கர்த்தன் அடியிணையை
உட்புலன் கொண்டேத்திப் —பசுவே
உன்னதம் எய்வாயே
சுட்டியுங் காண வொண்ணா — பசுவே
சூனியமான வஸ்தை
ஒட்டிப் பிடிப்பாயேல் — பசுவே
உன்னை நிகர்ப்பார் யார்.

என்பவை இடைக்காட்டுச் சித்தர் பாட்டு. இடையர் பசுவையும், கோனாரையும் முன்னிலைப் படுத்திப் பாடுவதும் இயல்புதானே? கானல் நீராகப் பற்றினை நினைத்து நீக்கித் துறந்தவர் சித்தர்.

"தாமரை யிலையினில் தண்ணீர தங்காத
தன்மை போல் சகத்தாசை தள்ளிவிட்டு" என்றும்
"சொல்லும் புளியம் பழத்தின் ஓடு போலவே"
என்பவை போன்ற

உவமைகளால் பற்றற்ற நிலையினைத் தெற்றென விளக்குவர். இங்ஙனம் பற்றறுத்துப் பதியின் தண்ணிழலை ஆன்மா அடைவதற்கு உறுதுணையாகும் ஐந்தெழுத்தின் சிறப்பைச் சிவவாக்கியர் பின்வருமாறு பாடுவார்.

ஆனவஞ் செழுத்துளே அண்டமும் அகண்டமும்
ஆனவஞ் செழுத்துளே ஆதியான மூவரும்
ஆனவஞ் செழுத்துளே அகாரமும் மகாரமும்
ஆனவஞ் செழுத்துளே அடங்கலாவ துற்றதே.

சித்தர், அவனே தானேயாகிய அந்நெறியினைக் கடைப்பிடித்து ஏகனாகி (இரண்டறக் கலந்து இறைவனுடன் ஒன்றிவிடல்) இறைபணியிலும் நின்றவர் என்பதைப் பத்திரகிரியார் தெளிவாய்க் கூறுவர்,

"என்மயமாய்க் கண்டதெல்லாம் எண்ணி எண்ணிப் பார்த்தபின்
தன் மயமாய்க் கொண்டநிலை சார்ந்துநிற்பதெக்காலம்"
"வேதாந்த வேதமெல்லாம் விட்டொழிந்தே நிட்டையிலே
ஏகாந்தமாக இருப்பதினி யெக்காலம்,"

காணும் கண்ணுக்குக் காட்டும் உள்ளொளியைப் பாம்பாட்டிச் சித்தர்.

"கண்ணுக்குக் கண்ணான வொளி கண்டு கொள்ளவே
கட்டறுத்து வாழ்ந்திட நின்றாடாய் பாம்பே"
எனப்பாடுவார்,

சித்தர்கள், அயரா அன்பின் திறத்தை நன்குணர்ந்து அனபுமலர்களையிட்டு இறைவனை அருச்சித்தவர்கள்.

"அன்பெனும் நன்மலர் தூவி — பர
மானந்தத் தேவனடியிணை மேவி"

மேல் நிலையை அடைந்தவர்கள்.

மேற்கூறிய வாறு சிவனெனும் செம்மேனியம்மானின் செம்மலர் நோன்தாளைச் சேரவொட்டாது தடுக்கும் மும்மலம் நீக்கிப் பற்றுத்துச் சிவநேயச் செல்வருடன் கூடியும் மகிழ்ந்தவர், நல்லாரிணக்கம் நாடியவர் என்பதை,

"நல்ல வழிதனை நாடு — எந்த
நாளும் பரமனை நத்தியே தேடு
வல்லவர் கூட்டத்திற் கூடு — அந்த
வள்ளலை நெஞ்சினில் வாழ்த்திக் கொண்டாடு"

என்ற கடுவெளிசித்தரின் வாக்கு புலப்படுத்தும். அவ்வாறு கூடிய அம் மெய்யடியாரையும், அருள் பற்றி ஏழை எளியோரையும் நடமாடும் தெய்வங்களாகவே — நடமாடுங் கோயில்களாகவே கண்டவர். கோயிலுக்கு அளிக்கப்படும் பொருள் ஏழை எளியோர்க்குப் பயனளிக்காமற் போகலாம். ஆனால் ஏழை எளியோர்க்கு இடப்பெறும் பொருள் அவர் தம்முள் உறையும் இறைவனுக்கும் ஒருங்கே இடுவதாகும் எனும் புரட்சிக் கருத்தை,

படமாடக் கோயில் பகவற்கங் கீயில்
நடமாடக் கோயில் நம்பர்க்கங் காகா
நடமாடக் கோயில் நம்பர்க் கொன்றீயில்
படமாடக் கோயில் பரமற்கங் காமே

என்ற திருமந்திரச் செய்யுள் உணர்த்தும்.

சிவஞான போதத்தின் இறுதிச் சூத்திரமான பன்னிரண்டாம் சூத்திரத்தின் இறுதிப் பகுதியிற் குறிக்கப் பெறும் ஆலய வழிபாடும் உருவ வழிபாடும் கூட சித்தர்கட்கு உடன்பாடேயாகும். இதற்கு முரணான கருத்தையுடையவர் அதற்கெடுத்துக் காட்டாகப் பின்வரும் சிவவாக்கியரின் பாட்டைக் குறிப்பது முண்டு.

"நட்டகல்லைத் தெய்வமென்று நாலுபுட் பஞ்சார்த்தியே
சுற்றிவந்து மொண மொணென்று சொல்லுமந்த்ர
மேதடா
நட்டகல்லும் பேசுமோ நாதனுள் ளிருக்கையில்
சுட்ட சட்டி சட்டுவங் கறிச்சுவை யறியுமோ"

இப்பாட்டும், நாதனுள்ளே இருக்கிறான் என்ற அடிப்படைக் கருத்தினால் பாடப் பெற்றது. ஆலய வழிபாடும் உருவ வழிபாடும் உள்ளேயிருக்கும் இறைவனைக் காணத் துணைப்பொருள்களேயாகுமன்றி அவையே அச்சமயத்தின் முடிவுகளல்ல என்ற கருத்தைப் பாட்டில் வரும் உவமை

நன்கு விளக்கும். சமைத்த சட்டியும், சட்டுவமும் கறிச் சுவையை அறியாவிட்டாலும் அவ்விரண்டுமில்லாது கறியைச் சமைக்க முடியுமா?

இதுகாறும் கூறிய வற்றால் மெய்கண்டாரின் சிவ ஞான போதச் சூத்திரக் கருத்தனைத்தும் சித்தர் பாடல் களில் இருக்கக் கண்டோம். எனவே சித்தர்கள்,

> தித்திக்கும் தெள்ளமுதைச் சித்தாந்தத் துட்பொருளை
> முத்திக்கு வித்தை முதனிலைப்ப தெக்காலம்

என்றவாறு சிவனைச் சித்தாந்தத்தின் உட்பொருளாய்க் கொண்டவர்கள்.

> முத்தமிழ் கற்று முயங்கு மெய்ஞ்ஞானிக்குச்
> சத்தங்க ளே துக்கடி — குதம்பாய்
> சத்தங்க ளே துக்கடி

என்று தமிழ்முழக்கம் செய்தவர். "சாதிப் பிரிவிலே தீ மூட்டுவோம்" எனப் புரட்சி புரிந்தவர். அறநெறியே ஆன்மநெறி என வற்புறுத்தியவர்.

> "மனமது செம்மையானால் மந்திரஞ் செபிக்கவேண்டா
> மனமது செம்மையானால் வாயுவை உயர்த்த வேண்டா
> மனமது செம்மையானால் வாசியை நிறுத்தவேண்டா
> மனமது செம்மையானால் மந்திரஞ் செம்மையாமே"

என்று விளக்கியவர்.

> "அன்பு சிவம் இரண்டென்பர் அறிவிலார்
> அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
> அன்பே சிவமாவ தாரும் அறிந்த பின்
> அன்பே சிவமாய் அமர்ந்திருப் பாரே" என எல்லாச்

சமயங்கட்கும் பொதுவான அன்புநெறியைப் புகட்டியவர் கள். சுருங்கக் கூறின் "சித்தர் சிவலோகம் இங்கேதெரிசித் தோர்." அன்னார் தமிழர்க்குத் தந்த அழியா ஆன்மக்கலைச் செல்வம் மேன் மேலும் வளர்வதாக.

# சமாஜத் தேர்வுகளின் பாடத்திட்டம்

## இளஞ்சைவப் புலவர்

1. இலக்கணம்: நன்னூல் காண்டிகை ஆறுமுகநாவலர், நம்பியகப் பொருள், யாப்பருங்கலக் காரிகை, தண்டியலங்காரம். 2. இலக்கியம்: திருமுருகாற்றுப்படை, கந்தர் கலிவெண்பா, கந்தர் அலங்காரம், கந்தர் அனுபூதி, நால்வர் நான்மணி மாலை, சோணசைல மாலை, நீதிநெறி விளக்கம் திருக்குறள் அறத்துப்பால் (பரிமேலழகர் உரையுடன்) சுந்தரர் தேவாரம் முழுதும். 3. சாத்திரம்; திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார், உண்மை விளக்கம், திருவருட் பயன், கொடிக்கவி, விருவெண்பா. 4. உரைநடை; முருகன் அல்லது அழகு (திரு.வி.க.), வாகீசர் அல்லது மெய்யுணர்வு (சிவக் கவிமணி), பட்டினத்தார் வரலாறும் நூல் ஆராய்ச்சியும், தாயுமானவர் வரலாறும் நூல் ஆராய்ச்சியும் (கா. சு. பிள்ளை, M. A., M. L.,) பெரிய புராண வசனம், திருவிளையாடற் புராண வசனம் (ஆறுமுகநாவலர்)

## சைவப் புலவர்

1. இலக்கணம்: தொல்காப்பியம் எழுத்ததிகாரம் (நச்சினார்க்கினியர்), சொல்லதிகாரம்(சேனாவரையம்) பொருளதிகாரம் (இளம்பூரணம்), தருக்கசங்கிரகம் (சிவஞான முனிவர்)2. இலக்கியம்: பெரியபுராணம் (திருஞானசம்பந்தர் புராணம் முழுவதும்), திருவிளையாடற் புராணம் மதுரைக் காண்டம்,கந்தபுராணம் தட்சகாண்டம், திருக்குறள் பொருட்பால் (பரிமேலழகர் உரையுடன்), அப்பர் தேவாரம் முழுமையும், திருவாசகம் முழுதும், திருக்கோவையார் 200பாடல்கள் (பேராசிரியர் உரையுடன்), 3. சாத்திரம்; சிவஞான போதச் சிற்றுரை, சிவஞான சித்தியார் சுபக்கம் (சிவஞானமுனிவர் உரை) சிவப்பிரகாசம், சங்கற்ப நிராகரணம். 4. உரைநடை; சைவசித்தாந்த ஞானபோதம் (மறைமலை அடிகள்)சிவஞான சித்தியார் ஆராய்ச்சி (ந.சிவகுருநாத பிள்ளை)திருக்குறளின் உட்கிடை சைவசித்தாந்தமே (க. வச்சிரவேலு முதலியார்) சிவஞானமுனிவர் உரைநடை நூல்கள், பெரிய புராண சூசனம் (ஆறுமுகநாவலர்) திராவிடப் பிரகாசிகை (சபாபதி நாவலர்)

# செய்திச் சுருக்கங்கள்

**பூவாளூர்ச் சைவ சித்தாந்த சங்கம்; 52ஆம் ஆண்டு** விழா "சித்தாந்த கலா நிதி" பேராசிரியர் திரு. ஔவை சு. துரைசாமி பிள்ளை அவர்கள் தலைமையில் மே மாதம் 26, 27, தேதிகளில் சிறப்புற நிகழ்ந்தது. திருவாளர்கள்: புலவர். ந. ரா. முருகவேள் M. A., M. O. L., முத்து சு. மாணிக்க வாசக அடிகள், பேராசிரியர் வித்துவான் க. வெள்ளைவாரணர், வித்துவான் சொ. சிங்காரவேலன் B. A., வித்துவான் வி. சா. குருசாமி தேசிகர் ஆகிய அறிஞர்கள் முறையே பதினோராம் திருமுறை, அடிமலரும் அருளரசும், திருவருட்பயன், இலக்கியத்திற் சைவம், வாழ்வியலிற் சைவம் என்னும் பொருள்கள் பற்றிச் சொற்பொழிவாற்றினர். முத்தமிழ்க் காவலர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம், திருக்குறள்வேள் ஜி. வரதராச பிள்ளை B. A., முதலிய பெருமக்கள் பலர் வந்திருந்து விழாவைச் சிறப்பித்தனர். செயலாளர் திரு. பூ. செ சண்முக சுந்தரம் நன்றியுரை வழங்கி, விழா இனிது நிறைவுற்றது.

**திருஞான சம்பந்தர் திருநாள்:** அரக்கோணம் வட்டம் நெமிலி கிராமத்தில், ஸ்ரீ அப்பர் சுவாமிகள் வார வழிபாட்டுச் சபையின் சார்பில், திருமுறைப் பாராயணம் அடியார்களுக்கு அன்னம் பாலிப்பு ஆகிய நிகழ்ச்சிகளுடன் சிறப்புறக் கொண்டாடப் பெற்றது. காஞ்சிபுரம் தவத்திரு. ஞானானந்த அடிகள் "திறக்கப் பாடிய செந்தமிழ்" பற்றி விரிவுரை யாற்றினார்.

**பெரிய புராண விரிவுரை:** வாலாஜாபாத் இந்துமத பாடசாலை அண்ணா திரு நா. ப. தணிகைஅரசு அவர்களால், காஞ்சிபுரத்திற்கு அருகில் உள்ள ஏகனும்பேட்டைக் கிராமத்தின்கண், வெள்ளிக்கிழமை தோறும் நிகழும் வார வழிபாட்டினை யொட்டி நடத்தப் பெற்று வருகின்றது. திரளான மக்கள் வந்திருந்து கேட்டுப் பயன் பெறுகின்றனர். இங்ஙனம் கிராமங்கள் தோறும் வார வழிபாடும் விரிவுரைகளும் நிகழும்படி, ஆங்காங்குள்ள அறிஞர் பெருமக்கள் செய்ய முற்படுதல் தமிழுக்கும் சமயத்திற்கும் பெரிதும் ஆக்கந் தரும். இத்துறையில் கருத்துச் செலுத்துமாறு தமிழறிவும் சமயவுணர்வும் உடைய தக்கவர்கள் அனைவரையும் வேண்டிக் கொள்ளுகின்றோம்.

## சமாஜ வெளியீடுகள்

—— x ——

### விலைகள் குறைக்கப்பட்டிருக்கின்றன

— x —

| | | முன்விலை | இப்போதுவிலை |
|---|---|---|---|
| 1. | பெரியபுராணம் (கலிக்கோ கட்டிடம்) | ரூ. 3. | ரூ. 2. |
| 2. | சைவசமயச் சொற் பொழிவுகள் | ரூ. 3. | ரூ. 2. |
| 3. | ஞானியாரடிகள் நினைவுமலர் | ரூ. 2. | ரூ. 1. |
| 4. | பொன்விழாமலர் | ரூ. 1. | 50 ந. பை. |
| 5. | முருகன் முந்நூல் | | 40 ,, |
| 6. | அறப்பயிற்சி மாலை (முதற்புத்தகம்) | | 50 ,, |

இவை மயிலாப்பூர் கீழமாடவீதியில் 12. எண்ணுள்ள சமாஜ அலுவலகத்தில் கிடைக்கும்.

Printed at the Sengunthamithran Press, 33, Armenian St., Madras-1 by V. Sambandan, Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. and Published by S. Satchidanandam Pillai, B.A., L.T., for the Saiva. Siddhantha Maha Samajam, 12, East Mada St., Mylapore, Madras-4.